

உ
சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத் திங்கள் இதழ்

மலர் 13 ] டிசம்பர் 1997 [ இதழ் 6

பெருமைதரு ஆசிரியர் : M. கண்ணப்ப செட்டியார்
(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)



துன்பம் நும்மைத் தொழாத நாள்கள் என்பாரும்
இன்பம் நும்மை ஏத்து நாள்கள் என்பாரும்
நும்பின் எம்மை நுழையப் பணியே என்பாரும்
அன்பன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்.

திருநாவுக்கரசு சுவாமிகள்







1997 டிசம்பர்

மலர் 15

இதழ் 6




மதுரைப் பன்னிரு திருமுறை மன்ற[illegible]

<u>நமது சிந்தனைக்கு :</u>

திருவெம்பாவை

'முன்னைப் பழம் பொருளே'

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றஉன் சீர் அடியோம்
உன்அடியார் தாள்பணிவோம் ஆங்(கு) அவர்க்கேபாங் (காவோம்
அன்னவரே எங்கணவர் ஆவார் அவர் உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே எமக்கு எங்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோம்ஏல்ஓர் எம்பாவாய்

—மாணிக்கவாசகர்

எல்லாவற்றுக்கும் முந்தியதாகிய பழம் பொருளுக்கும் முந்தியதாகிய பொருளே! பின்னையதாகிய புதுப் பொருளுக்கும் மறுபடியும் அப்படிப்பட்ட புதியவனே! உன்னை இறைவனாகப் பெற்ற உன்னுடைய சிறப்புடைய அடியோம் உன் சம்பந்தத்தால் உன்னுடைய மெய்யடியார்களுடைய பாதங்களை வணங்குவோம். அவ்விதம் வணங்கியபடியே அவர்களுடைய பக்கத்தில் இருப்போம். அவர்களே எங்களுடைய கணவர்கள் ஆவார்; அவர்கள் விரும்பிச் சொன்ன வண்ணமே நாங்கள் அடியராய்ப் பணி செய்யக் கடவோம்; எம் இறைவனே! எங்களுக்கு இந்த விதமாகக் கிருபை செய்வீராகில் எந்தக் குறையையும் உடையோம் அல்லோம்.





# பன்னிரண்டாம் திருமுறை

## பெரியபுராணம்

**தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்**

### பகுதி—4

**சென்ற மாதத் தொடர்ச்சி :**

**முதலை உமிழப் பாடினார் :**

சுந்தரர் திருவாரூர்ப்பெருமானை வழிபட்டு விடைபெற்றுப் பலதலங்களையும் வணங்கி மேல் கொங்குநாடு சேர்ந்தார். அங்கு புக்கொளியூர் அவிநாசித்தலத்தை அடைந்தார். அங்கு அக்ரகாரத்தில் ஒரு வீட்டில் மங்கல ஒலியும் எதிர் வீட்டில் அமங்கல ஒலியும் ஒலித்தன. காரணம் வினவிய சுந்தரரிடம் இவ்வூர் அந்தணச் சிறுவர் இருவர் இவ்வூர் ஏரியில் நீராடினர்; அவர்களில் ஒருவனை முதலைவிழுங்கியது; இறந்த சிறுவன் வீட்டில் அழுகை ஒலிகேட்கிறது. உயிர் தப்பிவந்த சிறுவன் வீட்டில் அப்பையனுக்கு ஏழு வயதாவதால் உபநயனம் நடக்கிறது; அதனால் அங்கு மங்கல ஒலிகேட்கிறது என்றனர். அதுகேட்ட சுந்தரர் முதலை வாய்ப்பட்ட சிறுவனை அழைத்துக் கொடுத்த பிறகே அவிநாசியப்பரைத் தொழுவேன் என்று குளக்கரைக்குச் சென்றார். ''எற்றான் மறக்கேன்'' என்னும் திருப்பதிகம் பாடினார். 7 ஆவது பாடலில் ''காரைக்கால் முதலையைப் பிள்ளைதரச்சொல்லு காலனையே'' என்று பாடினார். உடனே ஐந்து வயதில் விழுங்கிய சிறுவனை 7 வயது சிறுவனாக முதலை குளக்கரையில் உமிழ்ந்தது. பெற்றோர் பிள்ளையை எடுத்து சுந்தரரை வணங்கச் செய்து தாமும் வணங்கினர். சுந்தரர் பிள்ளையுடனும் பெற்றோர்களுடனும் அவிநாசிப் பெருமானை வழிபட்டுப் பதிகம் பாடிப் பரவினார். இப்பதிகம் கிடைத்திலது. எற்றான் மறக்கேன் என்ற பதிகத்தை நிறைவித்தாரே தவிரபுதியபதிகம்பாடவில்லை என்பது சிவக்கவிமணியின் கருத்து. பின்னர் அச்சிறுவனுக்கு உபநயனம் நடத்திச் சேரநாடு புறப்பட்டார்.

**அந்தணர் மனநிலைச் சிறப்பு :**

சுந்தரர் முதல் முறை கொங்குநாடு, சேரநாடு வந்து சென்ற போதே சுந்தரரை வணங்கி வழிபடவேண்டும் என்று எண்ணியும் அப்போது அது கை கூடவில்லை. என்று சுந்தரர் வருவார், அவரை நாம் எப்போது வணங்கி வழிபடப்போகி றோம் என்ற ஏக்கத்தில் இருந்தவர்கள்தான் அவிநாசி அந்தணச் சிறுவனின் பெற்றோர்கள், அப்பூதியடிகளைப் போன்றவர்கள். சுந்தரர் வந்துள்ளார் என்றதைக் கேட்டதுமே தம் குமாரன் இறந்த துக்கத்தை நீக்கி மலர்ந்த முகத்துடன் பன்னாளும் எதிர் பார்த்த தெய்வம் வந்துள்ளது. அதனை வணங்க வேண்டும் என்று ஓடி வந்தனர். சுந்தரரைக் கண்டனர் வணங்கி வழி பட்டனர்.

இவர்கள் மனப்பண்புதான் சுந்தரரை அவிநாசியப்பரைக் கூடத்தரிசிக்காமல் இவர்தம் சிறுவனை எழுப்பியே அவிநாசி யப்பரைத் தொழச்செய்தது. இப்பெற்றோர்களின் அன்பு முதிர் வும், சுந்தரரின் அருட்கனிவும் சேரும்போது அந்தணச் சிறுவன் உயிர் பெற்றெழவேண்டும் என்பது பெருமானின் திருவருள். இறைவன் அருள்வழி நடந்ததே இவ்வற்புதச் செயல். இறந்த களை எழுப்புவதாகவோ, பொருள் வளம் கொடுப்பதாகவோ சுந்தரர் அற்புதச் செயல் நிகழ்த்தினாரில்லை. சமயாசாரியர்கள் அற்புதச் செயல்கள் எல்லாம் இத்தகையனவே.

**மதிவெண்குடைப்பிடித்தார் :**

சுந்தரர் மலைநாடு சேர்ந்தார். இச்செய்தியைப் பலரும் சேரமான்பெருமாளிடம் தெரிவித்தனர். தெரிவித்தவர்கட் கெல்லாம் காசும் தூசும் கலந்தளித்தார். கொடி தோரணங் களுடன் சுந்தரரைத் தம் நாட்டு எல்லையில் சென்று வரவேற் றார். யானை மீது முன்பு சுந்தரரை எழுந்தருள்வித்து தாம் பின்பு அமர்ந்து வெயில்படாவண்ணம் குடைபிடித்துப் பரவினார். முதல் அழைப்பில் சேரமான் பின்பிருந்து சாமரை வீசினார். அது சிறிதுதூரம். ஆனால் இப்பொழுது வெகுதூரம் செல்லவேண்டி யிருப்பதால் வெயில்படாவண்ணம் குடைபிடித்து நிழல் கொடுத்தார். இச்சிறப்பு சிந்தித்து மகிழத்தக்கது.

''பெருமாள் தமிழின் பெருமாளை, வருகை
வரையின் மிசைஏற்றித் தாம்பின் மதி
வெண்குடை கவித்தார்''

என்பது சேக்கிழார் வாக்கு.

**அஞ்சைக்களத்தப்பர் அருள் :**

சேரமன்னரும் நாவலூர் மன்னரும் சேரர் மாளிகையுட் புகுந்தனர். ஆரூரரை அரியணையில் அமர்த்தி வழிபட்டார் சேரர் பெருமாள். பலரும் வணங்கி மகிழ்ந்தனர். உதியர் வேந்தரும் சுந்தரரும் மலைநாட்டுத்தலங்களை எல்லாம்வழிபட்டு மகிழ்ந்தனர். இப்படிப் பலநாள்கழிந்தபின் அரசர்திருமஞ்சனம் கொள்ளும் பொழுது பரமனைப்பண்டு தாம்பிரிந்தநிலை குறுகி வருவது கண்டார் சுந்தரர். திருவஞ்சைக்களம் குறுகினார். அவனியில் விழுந்தெழுந்தார். அலைப்புறும் மனைவாழ்க்கை சரியத்தொடங்கியது. ''தலைக்குத் தலைமாலை'' என்னும் பதிகம் பாடினார். இவ்வுலகினில் பாசம் அடுத்த வாழ்க்கையை அறுத்திட வேண்டும் என்று அன்பினால் பாடினார். தடுத்தாட் கொண்டபெருமானும் தன்னருள் புரியத் தலைப்பட்டார்.

**ஊரர் சேரர் உறவின் சிறப்பு :**

ஒன்றிய சிந்தையுடைய ஆரூரனை வெள்ளானை மீது ஏற்றிக் கொண்டு வருக என்று அயன் முதல் தேவர்க்கருள் செய்தார். தேவர்கள் கொணர்ந்த வெள்ளானையின் மீது வலம் வந்து ஏறினார். வானவர் பூமாரிபெய்தனர். சுந்தரர் கழறிற்றறி வாரை மனத்துள் நினைந்தவாறே சென்றார். சேரமான் தோழராகிய சுந்தரர் செயலை அறிந்த சேரமன்னர் அப்போதே சாரநின்றதோர் குதிரைமீதேறி திருவஞ்சைக்களம் சேர்ந்தார். வீரவெண்களிறு உகைத்து விண்மீது செல்லும் சுந்தரரைக் கண்டார். பாரில் நின்றிலர். விரைந்து சென்ற தம் மனத்தோடு குதிரையின் காதில் சிவமந்திரம் ஓதி முன்பு செலுத்தினார். அக்குதிரை விரைந்து பாய்ந்து சென்று வெள்ளானையில் செல் லும் சுந்தரரை வலம் வந்து முன்பு சென்றது. உதியரின் படை வீரர்கள் கண்ணுக்குத் தெரியும்வரை இக்காட்சியைப்பார்த்தனர். பின்முதிர்ந்த அன்பினால் உடைவாளால் உடலை வீழ்த்தி வீரயாக்கையுடன் வில்லவர் பெருமானைச் சார முன்சென்று சேவகம் ஏற்றனர். வெள்ளானை மேற்கொண்டு செல்லும் சுந்தரரின் முன்பாக இமையவர் கூட்டம் செல்ல ''தானெனை முன்படைத்தான்'' என்னும் திருப்பதிகம் பாடி திருமலைத் தென்திசைத் திருவாயில் சேர்ந்தார் சுந்தரர்.

**தடையும் அருளிப்பாடும் :**

அன்பர்களின் சிந்தை வஞ்சகமின்றி வெண்மையாக இருக்கும். அதுபோல்பெருமான் எழுந்தருளியுள்ள வெள்ளியங் கிரியாகிய கயிலாயமும் பனிப்படலத்தால் வெண்மையாய்

இருந்தது. வெள்ளானையையும், குதிரையையும் விட்டிறங்கிய ஊரரும் சேரரும் மலைத்தடம் பலகடந்து மணிவாயில் எய்தினர். அங்குள்ள திருஅணுக்கன் திருவாயில் சேர்ந்தனர். இத்திரு வாயில் கயிலைநாதன் இருக்கும் இடத்திற்கு அணிமையில இருப்பது. இங்கு இருவரும் வந்தவுடன் அழைப்பின்மையால் அடற்சேரர் காவலரால் தடையுண்டு நின்றனர். தம்பிரான் திருவருளாலே நாவலூர் காவலர் கயிலைப்பெருமான் திருமுன்பு நண்ணினார்.

நண்ணிய ஊரர் பெருமான் திருமுன்பு தாழ்ந்து வீழ்ந்து எழுந்தார். பசுவினைப் பிரிந்த கன்று அப்பசுவினைக் கண்ட' போது என்னுறுமோ அந்நிலை எய்தினார் ஆரூரர். அம்மையை ஒருபாகத்தடக்கிய அப்பனார் ''ஊரனே'' வந்தனை உலகுய்ய என்றார். இங்கு உலகுய்யச் சென்று வந்தனை என்ற குறிப்புப் புலப்படுதல் காண்க.

சுந்தரர் அடியேன் பிழை பொறுத்து ஆண்டு கொண்டு, பாசத்தொடக்கறுத்து முடிவிலா நெறிதரும் நின் கருணை என் தரத்திற்கு ஏற்றதோ! என்று தன் தகுதி இன்மையும், பெருமான் கருணைப்பெருக்கின் தன்மையும் விதந்து போற்றினார். இன்பமே ஒருவடிவெடுத்தாற்போல் நின்றார். முன்பு தில்லையில்,

''இந்துவாழ்சடையான் ஆடும் ஆனந்த எல்லையில் (தனிப்பெருங்கூத்தின்
வந்தபேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலாமகிழ்ச்சியில் (மலர்ந்தார்''

என்றதுபோல் இங்கும் வன்றொண்டர் இன்ப வெள்ளத்துள் மலர்ந்தனர் என்கிறார் சேக்கிழார்.

**ஆதிஉலா அரங்கேற்றம் :**

இங்ஙனம் இன்பவடிவில் நின்றவன் தொண்டர், பெருமானே! சேரலன் திருமணிவாயில் புறத்தினன் என்றனர். குன்றவில்லியார் சிறிதும் தாழ்க்காமல் பெரியதேவர் எனப் போற்றப்படும் நந்தியெம்பெருமானைப் பார்த்து உடன் சென்று கொணர்க என்றார். அவரும் சென்றுவென்றி வானவர்க்குஅருளிப் பாடு என்றார். வானவராகிய சேரரும் கழல்தொழ விரைந் தெய்தினார். மங்கைபாகர்தந் திருமுன்பு வெகுதூரத்திலேயே வீழ்ந்து வணங்கி மகிழ்ந்தார்; போற்றினார். இதனால் பெருமானையும், பெரியோர்களையும் எட்டியிருந்தே வணங்கிப்

போற்றவேண்டும் என்ற மரபு தெளிவிக்கப்படுகிறது. திருக் கயிலைநாயகரும் தம் முறுவலின் கதிர் காட்டி இங்கு நாம் அழையாமை நீ எய்தியது என்? என்று அருளுடன் கேட்டார். சேர அரசர் அஞ்சலிகூப்பி நின்று அடியேன் ஆரூரர்கழல் போற்றி அவர் எழுந்தருளிவந்த வெள்ளானை முன் சேவித்து வந்தேன். அது கயிலைவாயிலில் கொண்டுவந்துவிட்டது. நின் கருணை வெள்ளம் தேவரீர் திருமுன்பு கொண்டு வந்துள்ளது. அடியவர் கருணையும், ஆண்டவன் அருளும் கொண்டு வந்து உன் திரு முன்புவிட்டதே தவிர யானாக வரவில்லை என்று சொல்லிய தோடு, மேலும் ஒரு விண்ணப்பம் என்றார். மருவுபாசத்தை அகன்றிட வன்றொண்டருடன் கூட்டியபெருமானே! வேதமும், முனிவர்களும் துதிக்கும் பெருமையுடைய தேவரீர் மீது அன்பினால் ''திருஉலாப்புறம்'' பாடினேன். அதைத் திருச்செவி சாத்திடப் பெறவேண்டும் என்றார். ஈசரும் சொல்லுக என்றனர். சேரரும் கேட்பித்தார்.

**சேரரும் ஊரரும் :**

நாரிபாகராம் கயிலைநாதரும் ஊரனாகிய ஆலாலசுந்தர னுடன் இருவரும் இங்கு நம் கணநாதராம் தலைமையில் தங்கு வீர் என்று அருள் செய்தார். அந்நிலையில் இருவரும் பெரு மானைப் பணிந்து எழுந்து அருளைத்தலை மேற்கொண்டனர். வன்றொண்டர் ஆலால சுந்தரராகி வழுவாத முன்னை நல் வினைத்தொழில் தலை நின்றார். ஆலாலசுந்தரர் ஆயினார். சேரர் பெருமானும் நன்மை சேர் கணநாதராய் நயப்புறு தொழில் பூண்டார்.

**வருணனும் சாத்தனும் :**

நலத்தின்மிக்க பரவையாரும், சங்கிலியாரும் வல்வினைத் தொடக்கற, நாயகி அருளாலே முன்னைய கமலினி அநிந்திதை யராகி இமவான் மகளாகிய பெருமாட்டியின் கோயிலில் முன்பு செய்து வந்த தம் தொழில் வழிநின்றனர். சுந்தரர் யானை மீது வரும்போது தம்வாழ்வில் நிகழ்ந்தமை எல்லாம் அகச்சான்றாகக் கூறும் ''தானெனை முன்படைத்தான்'' என்ற ஏழிசைத் திருப் பதிகத்தினை இவ்வுலகமும் ஏற்று ஈடேற்றம் பெற எண்ணினார். ஆழிவேந்தனாகிய வருணனிடம் அளித்து அவன் வழியாக அஞ்சைக்களத்தப்பருக்குச் சேர்ப்பிக்கச் செய்தார். அவனும் அவ்வருள் தலைக்கொண்டு அஞ்சைக்களத்துய்த்து உணர்வித்

தான். சேரர் காவலர் விண்ணப்பம் செய்த அத் ''திருவுலாப் புறம்'' கயிலையில் கேட்ட மாசாத்தனார் (ஐயனார்) ஏற்று பூவுலகில் வேதியர் தொழுதெழும் திருப்பிடவூரினில் வெளிப் படப்பகர்ந்து உலகினில் விளங்கிட நாட்டினார்.

பிடவூர் என்பது திருச்சி மாவட்டத்தில் பெரம்பலூர் செல்லும் சாலையில் உறையூருக்கு அருகில் உள்ளது. இது ஒரு வைப்புத்தலம். திருப்பதட்டூர் எனஇப்போது வழங்கப்படுகிறது. கல்வெட்டில் பிடவூர் நாட்டுப் பிடவூர் எனக்காணப்படுகிறது. இங்குள்ள ஐயனார் கையில் திருஉலாஏடு அமைந்தபடி உள்ளது. இவர் அரங்கேற்றிய ஐயனார் என வழங்கப்படுகிறார்.

சேரர் காவலர் திருஅணுக்கன் திருவாயிலில் தடையுண்டு நின்றபோது கிடைத்த நேரத்தில் இத்திருஉலாப்புறம் பாடி யிருத்தல் வேண்டும். ஆனால் எப்போது பாடினார் என்று சேக் கிழார் குறிப்பிடவில்லை. முதன் முதல் பாடப்பெற்றமையால் இவ்வுலா ஆதிஉலா எனப்போற்றப்படுகிறது. சிவஞானமே கருத் தாகப் பதிஞானத்தால் கயிலைநாதர் மீது பாடப்பெற்றதாத லின் திருக்கயிலாய ஞான உலா என்றும், தெய்வத்தன்மை வாய்ந்ததாதலின் தெய்வ உலா என்றும் போற்றப்படுகிறது. திரு வுலாப்புறம் என்பது புறத்திணைகள் பன்னிரண்டனுள் புறப்புறம் என்னும் பாடாண் திணையுள் வருவது. அத்திணைக்குரிய துறைகள் 47-ல் கடவுளிடத்து மானிடப்பெண்டிர்நயந்த பக்கம் என்ற துறையில் முன்னர் அமைக்கப்பட்டிருப்பது.

**சதேகமுத்தி :**

சதேகமுத்தி, விதேகமுத்தி என முத்தி இருவகைப்படும். அவற்றுள் சுந்தரரும் சேரமானாரும் அடைந்தமுத்தி சதேக முத்தியாகும். சதேகம் என்பது உடம்புடன் கூடியே முத்தி யடைதலாகும். ச–தேகம்; ச என்பது உடன் என்ற பொருளில் வருவது. வி–தேகம்; உடலைவிட்டு உயிர் முத்தியடைதலாகும். ஆரூரரின் உடம்பு ஞான உடம்பு. அதாவது அறிவே வடிவாய் அமைந்தவர். இதனை நம்பியாண்டார் நம்பிகள் தாம் அருளிய திருத்தொண்டர் திரு அந்தாதியுள்

''ஞான ஆரூரரைச் சேரரை அல்லது நாம் அறியோம்
மானவ யாக்கையொடும் புக்கவரை''

என்று குறிப்பிடுதல் காணலாம். மேலும் மணிவாசகரும், திருநாளைப் போவாரும் நடராஜப்பெருமான் திருவடியில் சதேக முத்தியடைந்ததாகவே காணப்படுவதும் இங்கு நினைவு கூரத் தக்கது.

**வான்புகழ் நின்றது உலகெலாம் :**

மாதவம் செய்ததென்திசை வாழ்ந்திடத் தீதிலாத் திருத்தொண்டத்தொகை தரப்போந்த சுந்தரர், தம்பிரான் தோழராகவும் சேரமான் தோழராகவும் வாழ்வியலை நடத்தி. அவ்வாழ்வில் பல அற்புதங்களை நிகழ்த்தினார். அவற்றால் பலரும் சிவநெறியின் செழுமை தேர்ந்து உணரச்செய்தார். அதனால் என்றும் இன்பம் பெருகும் இயல்பினால் ஒன்று(சிவம்) காதலித்து உள்ளமும் (உயிர்கள்) ஓங்கிடச் செய்தார். மன்றுளாரடியாரவர் வான்புகழ் உலகெலாம் நிலைபெறச்செய்தார். என்றும் நிலையாக நம் உள்ளத்தில் வாழ்கிறார். நம்மை வாழ்விக்கின்றார்.

''உலகெலாம்'' என்று நடராசப்பெருமான் அடியெடுத்துக் கொடுத்தார். அது பெரியபுராணத்துள் முதலில் காண்பது. இடையில் சரியாக நடுவில் ஒரு உலகெலாம் என்று வருகிறது. அப்பாடல் திருஞானசம்பந்தர் திருநெல்வாயிலரத்துறையில் சிவிகை ஏறியபோது அந்நிகழ்ச்சியை அறிவிக்கும் பாடல். அதனைக் காண்போம்.

''சோதிமுத்தின் சிவிகை சூழ்வந்து பார்
மீதுதாழ்ந்து வெண்ணீற் றொளிபோற்றி நின்று
ஆதியார் அருளாதலின் அஞ்செழுத்து
ஓதி ஏறினார் உய்ய உலகெலாம்''

சேக்கிழார் நிறைவிலும் உலகெலாம் என்றே நிறைவுசெய்கிறார். அப்பாடல் காண்க.

''என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியாரவர் வான் புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம்''

சேக்கிழார் பெருமான் திருவடி போற்றிப்
பாக்கியம் பெற்றோம் பரவி உலகெல்லாம்.

# சாக்கிய நாயனார் புராணம் உணர்த்தும் தத்துவ உண்மைகள்

டாக்டர். கோமதிசூரியமூர்த்தி, இணைப்பேராசிரியை,
சைவசித்தாந்தத்துறை, மதுரை காமராசர்பல்கலைக்கழகம்

**சாக்கிய நாயனார் வரலாற்றுச் சுருக்கம் :**

சாக்கியர் என்றால் பௌத்தர் எனப் பொருள். இவர் திருச்சங்க மங்கையில் அவதரித்தவர். அனைத்து உயிர்களிடமும் அருளுடையவர். நன்னெறியில் நிற்பவர். பௌத்த நெறியைக் கற்கக் காஞ்சியை அடைந்தார். நூல்களை ஆராய்ந்தார். தெளிவு உண்டாகவில்லை. பின் சைவநூல்களைப் படித்தார். சிவனாரருளால் வினையும், வினைசெய்வோனும் வினைப் பயனும், வினையை ஊட்டுவோனும் என்னும் நாற் பொருளையும் விளக்கும் சைவசமயமே சிறந்தது எனத் தெளிந்தார். சிவ நெறியை மேற்கொண்டார். ஆனால் சாக்கிய கோலத்தை மாற்றவில்லை. ஒரு நாள் சிவலிங்கத்திருவுருவத்தைக் கண்டார். சாக்கியர்கள் மலர் பறித்து வழிபாடு செய்யும் வழக்கமில்லாதவர்களாதலால் செய்வது இன்னதென அறியாது ஒரு கல்லை அதன்மேலே எறிந்தார். பின் நாள்தோறும் அதுவே வழக்கமாயிற்று. சிவபெருமான் அவருடைய வன் செயலையும் அன்பால் ஏற்று அவர்க்குக் காட்சி கொடுத்தருளினார்.

**சாக்கிய நாயனார் புராண அமைப்பு :**

சேக்கிழார் அருளிச் செய்த திருத்தொண்டர் புராணத்திலுள்ள பதின்மூன்று சருக்கங்களுள் ஏழாவதாக உள்ள வார்கொண்டவன முலையாள் சருக்கத்துள் அமைந்துள்ளது. இச்சருக்கத்துள் பேசப்படும் நாயன்மார்கள் ஆறுபேர். அதில் இவர் முதலாமவர். இப்புராணத்தில் 18 பாடல்கள் உள்ளன.

## சாக்கிய நாயனார் புராணம் உணர்த்தும் தத்துவங்கள்

**1. அறுவகைச் சமயத்திற்கும் தலைவர் சிவன் :**

ஆறுவகைச் சமயங்களாவன : 1. புறப்புறச்சமயம். 2. புறச்சமயம் 3. அகப்புறச்சமயம் 4. அகச்சமயம்.

**புறப்புறச்சமயம் :** வேதத்தையும், ஆகமத்தையும் ஏற்றுக் கொள்ளாதவர்கள் சமயம்.

**புறச்சமயம் :** வேதங்களை ஏற்றுக் கொண்டு சிவாகமங்களை ஒப்புக்கொள்ளாதவர் சமயம்.

**அகப்புறச்சமயம் :** வேதாகமங்களை பொதுவாக ஏற்று, பாசுபதம் முதலான நூல்களைச் சிறப்பாக ஏற்பவர்கள் சமயம்.

**அகச்சமயம் :** இச்சமயத்தார் சைவசித்தாந்த செந்நெறியைப் பெரிதும் ஏற்பினும வீட்டு நெறி பற்றிய கருத்தில் வேறுபடுவர்.

''அறுசமயத் தலைவர்'' (சாக்கிய நாயனார் புராணம், செய்யுள்,1) என்று சேக்கிழார் கூறுவது ஆறுவகைச் சமயத்தார்க்கும் தலைவர் சிவன் என்பதை உணர்த்தும்.

''அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்''
(சிவஞான சித்தியார் சுபக்கம்,
பாயிரம்,2)

என்று அருணந்திசிவாசாரியார் பரசிவ வணக்கப் பாடலில் குறிப்பிடுவது இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

**2. சிவ நல்ல நெறியே உண்மைப்பொருள்**

இது ''ஈசர் அருள் கூட ஈறில் சிவ நன்னெறியே பொருளாவதென உணர்வு நாட்டுவார்'' (செ.4) என்ற சேக்கிழார் வாக்கால் உணரப்படும்.

''வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பி
தாழ்வெனும் தன்மை யோடும் சைவமாம் சமயம் சாரும்
ஊழ் பெறல் அரிது சால உயர் சிவ ஞானத் தாலே
போழின மதியி னானைப் போற்றுவார் அருள்
பெற்றாரே''
(சித்தியார், சுபக்கம், செ 181)

என்று அருணந்தி சிவாசாரியார் கூறியபடி சாக்கிய நாயனார் நல்லூழால் சிவ நன்னெறி சார்ந்தார் எனலாம்.

**3. சைவத்திற்கேயுரிய வினைக்கோட்பாட்டின் சிறப்பு**

பொதுவாக வினையுண்மையை எல்லா இந்தியச் சமயங்களும் ஒப்புக் கொண்டாலும், வினைப்பலனானது செய்த உயிர்களைத் தாமே சென்றடையும் என்பது பௌத்த, சமணர்களின் கோட்பாடாகும். ஆனால் வினைப்பலனைச் செய்த உயிர்கட்குத் தப்பாமல் சேர்ப்பிப்பவன் இறைவன் என்பது சைவத்திற்கேயுரிய சிறப்பான வினைக் கோட்பாடாகும். வினைசடம்.எனவே தாமா

கவே செய்த உயிரைச் சென்றடையாது. உயிர்களோ சிற்றறிவுடையன. பிறவிதோறும் தூல உடம்பு மாறும். இன்பத்தையே விரும்பும். துன்பத்தை விரும்பாது. அதனறிவு அறியாமையால் மூடப்பெற்றுள்ளதால் உயிர்களும் தாம் செய்த வினைகளின் பயனை அறிந்து எடுத்துக் கொள்ளா. எனவே முற்றறிவினனான இறைவனே அந்தந்த உயிர்கள் செய்த அந்தந்த வினைகளின் பலன்களை அந்தந்த உயிர்கள் அனுபவிக்கும்படிச் சேர்ப்பிப்பான். வினைப்பலன்களை உயிர்கட்கு இறைவன் சேர்ப்பிப்பது ஏன் என்ற கேள்வி எழும். உயிர்களிடத்து அநாதியாய் பற்றியுள்ள ஆணவம் ஒரு நோய். வினைப்பலனை ஊட்டுவது அந்நோய்க்கான மருந்து. உயிர்களிடத்து கொண்ட பெரும் கருணையால் இறைவன் மருத்துவன்போல் செயல்படுகின்றான். சைவத்திற்குரிய இச்சிறப்பை,

''செய்வினையுஞ் செய்வானும் அதன் பயனும்
கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்
கொண்டே
''இவ்வியல்பு சைவநெறி அவ்வவற்றுக் கில்லை'' என
உய்வகையாற் பொருள் சிவன் என்று அருளாலே
உணர்ந்தறிந்தார்''
(செ.5)

என்று சாக்கிய நாயனார் புராணம் உணர்த்துகின்றது. இதனை அடியொற்றி பின்வந்த சாத்திர நூலாசிரியர்களுள் ஒருவரான உமாபதி சிவம் தம் திருவருட்பயனில்,

''செய்வானும் செய்வினையும் சேர் பயனும் சேர்ப்பவனும்
உய்வான் உளன் என்று உணர்'' (தி.ப.53)

என்று கூறுகின்றார். (செய்வான்—வினை செய்யும் உயிர் (இறைவன் வினையின் நீங்கியவன்). செய்வினை—நல்வினை, தீவினை. சேர்பயன் — நல்வினையால் உண்டாகும் இன்பம், தீவினையால் உண்டாகும் துன்பம். சேர்ப்பவன் — இறைவன்]

4. உலகம் இறைவனின் உடைமைப் பொருள் என்பது ''எல்லாம் உடைய ஈசனே இறைவன்''(செ.7) என்பதால் உணரப்படும்.

**5. இறைவனின் அருவுருவத் திருமேனி சிவலிங்கம்**

சமயங்கள் சில இறைவனை அருவமானவன் என்று கூறும். வேறு சில சமயங்கள் இறைவனுக்கு உருவம் கூறும். இறைவனுக்கு அருவம், அருவுருவம், உருவம் என்ற முத்திருமேனிகளைக் குறிப்பிடுவது சைவத்திற்கேயுரிய தனிச்சிறப்பாகும். உயிர்கள் படிமுறையால் தன்னை உணர்ந்து வழிபட்டு உய்ய வேண்டும் என்னும் பெருங்கருணையால் இறைவன் அவ்வாறு முத்திருமேனி உடையவனாகின்றான். உருவம் என்பது கண்ணுக்குப் புலனாவது. கை, கால், முகம் போன்ற அவயவப்பகுப்பு உடையது. அருவம் உருவத்திற்கு மறுதலை. கண்ணிற்குப் புலனாகாதது. சக்தியாயிருந்தே செயலாற்றுவது. அருவுருவம்என்பது கண்ணுக்குப் புலனாவது. முகம், கை, கால் போன்ற அவயப் பகுப்பு இல்லாதது, எ..டு ஒளிவடிவம். சிவலிங்கம். சிவலிங்கம் அருவுருவத் திருமேனி என்பதை.

''காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்''(செ.8)

என்று சாக்கிய நாயனார் புராணம் உணர்த்துகின்றது.

**6. உயிர்களின் கடமை சிவனை மறவாமை :**

''எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னிய சீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்''
.......................தூயசிவம் [என்றே
தன்னைமிகும் அன்பினால் மறவாமை தலைநின்ற (செ.6)

சாக்கிய நாயனார் வரலாறு, உயிர்கள் நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், துயின்றாலும், நனவிலும், கனவிலும் சிவனை மறவாதிருக்க வேண்டும் என்பதை உணர்த்தும். ''இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க'' (சிவபுராணம், வரி,2) என்று மாணிக்கவாசகர் கூறுவது இங்கு நினைவு கூறத்தக்கது. காரைக்காலம்மையார் இறைவனிடம் வேண்டியது முதற்கண் 'இறவாத இன்ப அன்பு' தானே. இதனைப் பின் வந்த மெய்கண்டதேவர், ''அயரா அன்பு (சூத்,ll) என்று குறிப்பிடுகின்றார்.

**7. வழிபாட்டில் அன்பு இன்றியமையாதது**

சாக்கிய நாயனார் புறத்தே கல்லெறிந்து வழிபட்டாலும் அகத்தே அன்பால் இறைவனை நினைத்திருந்ததால் இறைவனுடைய அருள் நோக்கம் அவருக்குக் கிட்டிற்று. எனவே வழிபாட்டில் அன்பு முக்கியம் என்பது உணர்த்தப்படும். அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை அவன். ''பக்தி வலையிற் படுவோன் காண்க'' *(திருவண்டப்பகுதி, வரி, 42)* என்கின்றார் மாணிக்கவாசகர்.

''நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவு நீரும் கண்டு
நக்கு நிற்பர் அவர் தம்மை நாணியே''

*(5 : 204 : 9)*

என்று திருநாவுக்கரசர் கூறுகின்றார். பின் வந்த திருக்களிற்றுப்படியார் நூலின் ஆசிரியர்,

''ஆறேனும் அன்பு செயின் அங்கே தலைப்படுங்காண்
ஆறேனுங் காணா அரன்'' *(களிறு, 15)* என்றும்,
''அன்பேயென் அன்பேயென் றன்பால் அழுதரற்றி
அன்பே அன்பாக அறிவழியும்—அன்பன்றித்
தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்'' *(களிறு,55)*

வழிபாட்டில் அன்பின் அவசியத்தை உணர்த்துகின்றார்.

சாக்கிய நாயனார் குருபூஜை மார்கழி பூராடம் ஆகும். இவ்வாண்டு *30—12—97*ல் வருகின்றது. அன்று நாம் அவரை வழிபட்டு அவர் வரலாற்றைப் படித்து, சிவநெறி ஒழுகித் திருவருள் பெற்று உய்வோமாக!

## மார்கழி மாத அடியவர் வழிபாடு

**இயற்பகை நாயனார் (21—12—97)**

**திருநீறு – கண்டிகை முதலிய சிவசாதனங்களிலே வயமாக்கப் பெற்ற மனமுடை யாரது செயல்கள் சாமான்ய பசுபோத உலகநீதி கொண்டு அளக்கப்படா. காவிரிப்பூம்**

பட்டினத்திலே வணிகப் பெருமகனாகத் திகழ்ந்த இயற்பகை நாயனார் தமது இல்லத்தில் எழுந்தருளிய சிவனடியாரை சி வ ன ா க வே பாவித்து, இல்லையே என்னாது சிவனடியார் விரும்பிக் கேட்ட தனது கற்புடை மனையாளை உடன் அனுப்பினார். சுற்றத்தார் உலக நீதி கொண்டு மறுத்தனர். நாயனார் அடியாரை சிவ னாகப் பாவித்நார். சுற்றத்தாரை வாள் கொண்டு அகற்றி, தமது மனையாளை உடன் போக விடுத்தார்.

இறைவன் இடப வாகனனாய்த் தோன்றி நாயனார் பெருமையை உலகறியச் செய்து இயற்பகையார், அவரது மனைவியார் சுற்றத்தார் யாவருக்கும் நற்கதி அளித்தார். இயற்பகை நாயனார் குருபூசை நாள் மார்கழித் திங்கள் ''உத்திரம்'' நன்னாள்.

மானக்கஞ்சாற நாயனார்(25-12-97)

அன்பின் திறத்தை யாவரும் அறியச் செய்து உல கினரை நல்வழிப்படுத்தி ஆட் கொள்ளுதல் சிவபெருமான் பேரருட்டிறம். ஒரு மகளின் மலர்க் கூந்தலை மண நாளில் அடியில் அரிந்து சிவனடியார்க்குத் தரவல்லது உறைப்புடைய பேரன்பின் திறம். இத்தகைய அரிய செயலைச் செய்தவர் சோழ நாட்டுக் கஞ்சாறூரில் சிவனடியாருக்கு வேண்டுவன வழங்கும் வள்ளலாக விளங் கிய மானக்கஞ்சாறனார். குரு பூஜைநாள் மார்கழித் திங்கள் ''சுவாதி'' நன்னாள்.

சாக்கிய நாயனார்(30-12-97)

திருச்சங்க மங்கைப் பதியில் வேளாளர் குலத்தில் பிறந்து காஞ்சியில் பல சமயங்களை ஆய்ந்து சிவநன்

நெறியே உயர்வுற்றது என்ற தெளிவைப் பெற்றார் சாக்கிய நாயனார். சிவனை மறவாது பணி செய்தல் எக்கோலத்தில் நின்றும் செய்யலாம் என்ற தெளிவும் பெற்று சிவலிங்க வழிபாட்டை மேற்கொண்டார். இறைவன் திருவருள் அவரது முதல் அருச்சனை ஒருகல்லால் செய்ய நேர்ந்தது. அதையே நியதியாகக் கொண்டு சிவலிங்க வழிபாடு செய்து முத்திப் பேறு பெற்றார். குருபூசை நாள் மார்கழித் திங்கள் பூராட நன்னாள்.

வாயிலார் நாயனார்(6–1–98)

மயிலாப்பூர் பதியில் வேளாளர் மரபில் தோன்றியவர் வாயிலார் நாயனார். சிவனுக்கு அகப்பூசை செய்தல் சிறப்பு என்பதையுணர்ந்து நாள் தோறும் தவறாது, மனக்கோயிலில் சிவபெருமானுக்குத் திருமஞ்சனமாட்டி, திருவமுது படைத்து அன்பினால் வழிபாடு செய்து முத்திப் பேறு பெற்றார். குருபூசை நாள் மார்கழித் திங்கள் ரேவதி நன்னாள்.

சடைய நாயனார்(11-1-98)

திருநாவலூரில் சிவமறையோர் குலத்தில் அவதரித்தவர் சடைய நாயனார். நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்திநாயனாரை மகனாகப் பெற்றவர். குருபூசை நாள் மார்கழித் திங்கள் "திருவாதிரை" நன்னாள்.

இந்த நாயன்மார் குருபூசை நாட்களில் அ/மி மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் நாயனாருக்கு திருமுறை பாராயணத்துடன் வழிபாடு செய்து, மதுரை பன்னிரு திருமுறை மன்றத்தார், மாலையில், பெரியபுராண சிந்தனை மேற்கொள்வார்.

C.S. சொக்கலிங்கம்.

தலவரலாறு

## திருவடகுரங்காடுதுறை

காவிரிக்கரையில் விளங்கும் தலங்கள் பலவும் இயற்கை வளங்களைக் குறிக்கும் நிலையினவாய்ப் பெயர் அமைதலையும் துறை என முடிவுறுதலையும் காணலாம். இத்தகைய பெயரமைப்பில் குரங்காடுதுறை என வழங்கும் தலங்கள் இரண்டு உள்ளன. தென்குரங்காடுதுறை, கும்பகோணம் மாயூரம் பேருந்துச் சாலையில் உள்ளது; ஆடுதுறை என வழங்கப்பெறுவது. வடகுரங்காடுதுறை என வழங்கும் இத்தலம் தஞ்சை மாவட்டம் பாபநாசம் தாலூகாவில் காவிரியின் வடகரையில் அமைந்து திகழ்வது. இவ்விரு தலங்களும் இராமாயணத்தில் இடம்பெற்ற சுக்கிரீவன் வாலி ஆகிய இருவரும் பூசித்த தலங்களாகும். தென்குரங்காடுதுறை சுக்கிரீவன் வழிபட்ட தலம். வடகுரங்காடுதுறை வாலி வழிபட்ட தலம். வாலி என்னும் குரங்கினால் பூசிக்கப்பெற்றுக் காவிரியின் வடகரையில் அமைந்து விளங்குவதாதலின் இத்தலம் வடகுரங்காடுதுறை என்னும் பெயர் பெற்றது. இது கும்பகோணத்திலிருந்து திருவையாற்றுக்குப் போகும் பேருந்துச் சாலையில் 21 கி.மீட்டர் தூரத்தில் இருக்கிறது. திருவையாற்றிலிருந்து 10 கி.மீட்டர் தூரத்தில் உள்ளது. பெருமாள் கோயில் என்று ஊர்ப்பெயர் வழங்குகிறது. ஆடுதுறைப் பெருமாள்கோயில் என்பது கோயிலுக்கு அருகில் பேருந்து நிற்குமிடத்தின் பெயராகும்.

### கோயிலமைப்பு :

பேருந்து நிற்குமிடத்திற்கு மிக அருகில் கோயில் உள்ளது. கிழக்குநோக்கிய சந்நிதி. தஞ்சாவூர் அரண்மனை தேவஸ்தானங்களில் இக்கோயிலும் ஒன்று. ஐந்து நிலைக்கோபுரம் கோயிலுக்கு அணி செய்கிறது. கோபுர வாயிலில் வடபுறம் முருகனும் தென்புறம் விநாயகரும் விளங்குகின்றனர். கோபுரம் திருப்பணி செய்விக்க வேண்டியநிலையில் உள்ளது. கோபுரத்தைவணங்கிக் கொண்டு கோயிலுக்குள் நுழைந்தவுடன் பெரிய பிராகாரம் உள்ளது. கோயிலுக்கு முன்னால் உள்ள பிராகார முற்றம் பெரியது. பெரிய பிராகாரத்தில் இராஜ கோபுரத்தைக் கடந்தவுடன் தென்புறம் நோக்கித் திகழ்வது பஞ்சமூர்த்திகள் மண்டபம். அதையடுத்து விளங்குவது அம்பாள் கோயில். பெரிய பிராகாரம் வலம்வரும் நிலையில் இல்லை. இது ஒரு பகுதி வாழைத் தோட்டமாகவும் ஏனைய பகுதிகள் செடி கொடிகள் அடர்ந்தும் உள்ளது.

...

துவஜஸ்தம்பமேடை, நந்தி, பலிபீடங்களைக் கடந்து சென்றால் இரண்டாம் கோபுர வாயிலை அடையலாம். கோபுரம் இடிந்துள்ளது. உள்ளே நுழைந்தவுடன் தோன்றுவது மகாமண்டபம். இம்மண்டபத்தில் சம்பந்தர் அப்பர் சுந்தரர் திருவுருவங்களும் செட்டிப் பெண் திருவுருவமும் சனிபகவான் பைரவர் திருவுருவங்களும் உள்ளன.

இரண்டாம் பிராகாரத்தின் மேற்புறம் விநாயகர் முருகன் மகாலக்ஷ்மி கோயில்கள் உள்ளன. கர்ப்பக்கிருக விமானத்தில் உள்ள சுதைச் சிற்பங்களில் வாலி வழிபட்ட நிகழ்ச்சியும், கர்ப்பவதியாகிய செட்டிப் பெண்ணுக்கு இறைவன் தென்னை மரத்தை வளையச் செய்து இளநீர் சீவித் தந்ததுமாகிய வரலாற்று நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளன.

கர்ப்பக்கிருகக் கோஷ்டங்களில் தென்புறம் விநாயகர் இலிங்கோத்பவர் தக்ஷிணாமூர்த்தி திருவுருவங்களும் மேற்புறம் அர்த்தநாரீசுவரர் திருவுருவமும் வடபுறம் பிர்மாதுர்க்கை திருவுருவங்களும் உள்ளன. சண்டேசுவரர்கோயில் தனியே உள்ளது. அதை அடுத்து தலமரங்களாகிய இரண்டு தென்னைகள் உள்ளன. வலமாகவந்து மகாமண்டபத்தை அடைந்தவுடன் நடராஜசபை உள்ளது. நடராஜர் சிவகாமி அம்மைதிருவுருவங்கள் சிலைவடிவத்தில் உள்ளன. அழகிய திருவுருவங்களாக இவை அமைந்துள்ளன. இங்கு தலப்பதிகம் கல்லில் பொறித்துப் பதிக்கப்பெற்றுள்ளது.

வழிபட்டுக்கொண்டே அர்த்த மண்டபத்திற்குள் நுழைகின்றோம். இங்குள்ள கற்றூண் ஒன்றில் வாலி இறைவனை வழிபட்ட ஐதிகம் பொறிக்கப்பெற்றுள்ளதைக் காணலாம். நவக்கிரகங்கள் இங்குள்ளன. தனியறையில் பஞ்சமூர்த்திகள், நடராஜர். சந்திரசேகரர், திருஞானசம்பந்தர் முதலியமூர்த்திகள் பாதுகாப்பாக எழுந்தருளுவிக்கப் பெற்றுள்ளனர்.

அடுத்து, இறைவன் சந்நிதியை அடைகிறோம். துவாரபாலகர்களுடன் வாயிலில் விநாயகருடனும் இறைவன் அருட்காட்சி நல்குகின்றார். இவர் வாலிவழிபட்டு அருள் பெற்ற மூர்த்தியாவார். அம்பாள் சந்நிதியை அடைகின்றோம். அம்பிகை அழகு சடைமுடியம்மை என்ற பெயரோடு விளங்குகின்றார். பின்னமடைந்த பழைய திருவுருவமும் அம்பாள்சந்நிதியில் வழிபாட்டுக்குரியதாய் வைக்கப் பெற்றுள்ளது.

இறைவன் திருப்பெயர்—அழகுசடைமுடிநாதர். இப்பெயர் தேவாரத்தில் ''வீங்கு நீர்ச்சடைமுடி அடிகளார்'' ''பீடுடைச் சடைமுடி அடிகளார்'' மதிபொதி சடைமுடி அடிகள் எனப் பலவாறாகக் குறிக்கப்படுகிறது. தயாநிதேசுவரர் என்றும் வழங்கப்படுகிறது. அம்பிகை பெயர் அழகுசடைமுடியம்மை. தீர்த்தம்—காவிரி. தலமரம்-தென்னை.

# பதிகப் பெருவழி—49

## திருவடகுரங்காடுதுறைத் திருப்பதிகம்

### திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

### திருப்பதிக வரலாறு

திருவின்னம்பர் திருக்கோயிலை வணங்கிச் சென்று வாலியார் வழிபட்ட திருவடகுரங்காடுதுறையை அடைந்து அவ் வழிபாட்டையும் சிறப்பித்துப் பாடியருளியது இத்திருப்பதிகம்.

இப்பதிகப் பாடல்களின் முற்பகுதியில் காவிரியின் வளம் கூறப்படுகிறது. காவிரி கோங்கம் குரவம் புன்னை முல்லை ஞாழல் பாதிரியாகிய இம்மரங்களை அடித்து வருகிறது. காவிரி தந்தங்கள், யானை கன்றுகள் சந்தனய அகில் முதலிய மரங்கள் இவற்றை உந்தி வருகிறது. சிறந்த மாணிக்க மணிகளை அள்ளி வருகிறது. மிளகுசெடிகளையும் வாழைக்கனிகளையும் கொண்டு வருகிறது. தேன், மழைநீர், மயிற்பீலி, காட்டுவளங்கள் முதலிய வற்றுடன் மாங்கனிகளை ஏந்தி ஏலம், இலவங்கம், இஞ்சி, மஞ்சள் இவற்றை உந்தி ஆரவாரித்து அசைந்துவருகிறது.

**பண்—சாதாரி**

திருச்சிற்றம்பலம்

கோங்கமே குரவமே கொழுமலர்ப்
புன்னையே கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்முபா
திரிகளே விரவியெங்கும்
ஓங்குமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
வீங்குநீர்ச் சடைமுடி யடிகளா
ரிடமென விரும்பினாரே. 1

காவிரியின் வடகரையில் விளங்கும் குரங்காடுதுறையைத் தமக்குரிய இடமாக விரும்பி எழுந்தருளியுள்ளார்சடைமுடிநாதர்.

மந்தமா யிழிமதக் களிற்றிள
மருப்பொடு பொருப்பினல்ல
சந்தமா ரகிலொடு சாதியின்
பலங்களுந் தகையமோதி
உந்துமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
எந்தையா ரிணையடி யிமையவர்
தொழுதெழு மியல்பினாரே. 2

குரங்காடுதுறையில் எழுந்தருளி விளங்கும் எந்தையார் இணையடிகளை இமையவர் தொழுதெழும் இயல்பினர்.

முத்துமா மணியொடு முழைவள
ராரமு முகந்துநுந்தி
எத்துமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
மத்தமா மலரொடு மதிபொதி
சடைமுடி யடிகள் தம்மேல்
சித்தமா மடியவர் சிவகதி
பெறுவது திண்ணமன்றே. 3

ஊமத்தை மலரோடு இளம்பிறை சூடிய சடைமுடியடிகளிடம் சித்தம் வைக்கும் அடியவர் சிவகதி பெறுவது திண்ணம்.

கறியுமா மிளகொடு கதலியின்
பலங்களுங் கலந்துநுந்தி
எறியுமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
மறியுலாங் கையினர் மலரடி
தொழுதெழ மருவுமுள்ளக்
குறியினா ரவர்மிகக் கூடுவார்
நீடுவா னுலகினூடே. 4

மானேந்திய கையினராகிய இறைவர் திருவடிகளைத் தொழுதெழ எண்ணும் உள்ளக் குறியுடையோர் நீண்ட வானுலகின்கண் என்றும் கூடிவாழ்வர்.

கோடிடைச் சொரிந்ததே னதனொடுங்
கொண்டல்வாய் விண்டமுன்னீர்
காடுடைப் பீலியுங் கடறுடைப்
பண்டமுங் கலந்துநுந்தி
ஓடுடைக் காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
பீடுடைச் சடைமுடி யடிகளா
ரிடமெனப் பேணினாரே. 5

பெருமை பொருந்திய சடைமுடிகளார் வடகரைக் குரங்காடுதுறையைத் தமது இடமென விரும்பினார்.

கோலமா மலரொடு தூபமுஞ்
சாந்தமுங் கொண்டுபோற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினார்
திருந்துமாங் கனிகளுந்தி
ஆலுமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
நீலமா மணிமிடற் றடிகளை
நினையவல் வினைகள்வீடே. 6

அழகிய மணமுள்ள சிறந்த மலர்கள், சந்தனம் தூபதீபங்கள் ஆகியவற்றைக்கொண்டு போற்றி வாலியார் வழிபட அருள் புரிந்த குரங்காடுதுறை இறைவரை நினைந்தால் எளிதில் நீங்காத கன்மவினைகள் விடுதலையாம்.

★ ★ ★ ★

நீலமா மணிநிறத் தரக்கனை
யிருபது கரத்தொடொல்க
வாலினாற் கட்டிய வாலியார்
வழிபட மன்னுகோயில்
ஏலமோ டிலையில வங்கமே
யிஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா வருபுனல் வடகரை
யடைகுரங் காடுதுறையே. 7

நீலமணி போன்ற நிறத்தையும் இருபது கரங்களையும் உடைய இராவணனை வருந்துமாறு வாலினால் கட்டிப்போட்ட வலிய வாலியார் வழிபட இறைவன் வீற்றிருப்பது வடகுரங்காடு துறைக் கோயில்.

பொருந்திறற் பெருங்கைமாவுரித்துமை
யஞ்சவே யொருங்கு நோக்கிப்
பெருந்திறத் தநங்கனை யநங்கமா
விழித்ததும் பெருமைபோலும்
வருந்திறற் காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
அருந்திறத் திருவரை யல்லல்கண்
டோங்கிய வடிகளாரே. 9

பிரம விட்டுணுக்கள் அடிமுடி அறியாது துன்புறுமாறு ஓங்கியழலாய் நிமிர்ந்த இறைவன் உமை அஞ்சுமாறு வலிய யானையை உரித்துப் போர்த்ததும் காமனை உடல் இல்லாதவாறு விழியால் எரித்ததும் பெருமை போலும்.

கட்டமண் தேரருங் கடுக்கடின்
கழுக்களுங் கசிவொன்றில்லாப்
பிட்டர்தம் அறவுரை கொள்ளலும்
பெருவரைப் பண்டமுந்தி
எட்டுமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறைச்
சிட்டனா ரடிதொழச் சிவகதி
பெறுவது திண்ணமாமே. 10

கட்டுப்பாடுகளை உடைய அமணரும் பௌத்தரும் கடுக்காய்களைத் தின்பவரும் மன இரக்கமில்லாத விலக்கத் தக்கவர்களும் கூறும் தர்மோபதேசங்களைக் கொள்ளாதீர்கள், குரங்காடுதுறைச் சிட்டரின் அடிதொழுதால் சிவகதி பெறுதல் திண்ணம்.

தாழிளங் காவிரி வடகரை
யடைகுரங்காடுதுறைப்
போழிள மதிபொதி புரிதரு
சடைமுடிப் புண்ணியனைக்

காழியான் அருமறை ஞானசம்
பந்தன கருதுபாடல்
கோழையா வழைப்பினுங் கூடுவார்
நீடுவா னுலகினூடே. 11

குரங்காடுதுறை இறைவனை ஞானசம்பந்தர் போற்றிப் பாடிய பாடல்களைக் கோழை மிடறோடு பாடினாலும் அவர்கள் என்றுமழியாத வானுலகை எய்துவர்.

---

## திருமுறைகளில் சமுதாய நோக்கு

**ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான்** எம்.ஏ.,எம்ஃபில்., பி.எச்.டி

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

**பிறப்பைப் போற்றுதல் :-**

பிறப்பு என்பது அவரவர்களின் புண்ணிய பாவத்தைப் பொறுத்து அமைவது. அதிலும் மனிதப் பிறவி எடுப்பது மிக உயர்ந்த புண்ணியப் பேறாகும், இந்தப் பிறவி எடுத்ததன் பயனை ஒவ்வொருவரும் உணர வேண்டும். இந்த மனிதப்பிறவியைக் கொண்டு நம்மால் இந்நாட்டிற்கோ சமயத்திற்கோ என்ன பணி செய்தோம்? என்று உணர்ந்து பார்க்கின்ற ஆற்றல் மிக்க அறிவு இந்த மனிதப் பிறவிக்கே கிடைத்து இருக்கிறது.

நாம் ஏன் பிறந்தோம்? நம்மால் என்ன பயன் இருக்கிறது? என்று யாரும் தம்மைத் தாமே தாழ்த்திக் கொள்வதோ, வருந்துவதோ கூடாது.

''வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி
மதித்திடுமின்''

என்றும்,

''மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த
மாநிலத்தே''

என்றும் அப்பர் அடிகள் உணர்த்தி இருக்கிறார். மனிதப்பிறவி வாழ்வதற்கே அமைந்தது. அந்த வாழ்க்கையை எந்த ஒரு மனிதனும் முழுமையாக அனுபவிக்க வேண்டும். என்றும், மகிழ்வோடும், இன்பமாய் வாழ வேண்டும், அதுதான் வாழ்க்கையாகும். இவ்வாழ்க்கை இன்பத்தை யாரும் புறக்கணிக்கக் கூடாது. அதனால் தான்,

''என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்''

என்றும்,

''என்றும் இன்பம் பெருகும் இயல்பினான்''

என்றும் உணர்த்துகின்றனர்.

பிறந்த இப்பிறவி பயன் உடையது, எந்தவொரு சூழ லிலும் மனந்தளரக் கூடாது என்பதை,

''தாம்மென்று மனந்தளராத் தகுதியரா யுலகத்துக்
காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங்
கருணையினான்''

என்று சம்பந்தப் பெருமான் உணர்த்துகிறார். மனிதனாகப் பிறந்தவர்கள் எந்தக் குலத்தவராக இருந்தாலும், எந்த இனத்த வராக இருந்தாலும், எந்த மதத்தவராக இருந்தாலும், மனித நேயம் ஒன்றாலேயே எந்தவொரு காரியத்தையும் சாதிக்க முடியும் என்பதை உணர்த்தினார்கள்.

''காக்கை குருவி எங்கள் சாதி—நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்''

என்ற பாரதி நினைவுக்கு வித்திட்டு

''எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்''

என்று சம்பந்தரும்,

''சாத்திரம் பலபேசும் சழக்கர்காள் இங்குக்
கோத்திரமுங் குலமுங் கொண்டு என்செய்வீர்''

என்று அப்பரும்,

''தம்மானை அறியாத சாதியார் உளரோ''

என்று சுந்தரரும் இதனை உணர்த்துகிறார்கள்.

**கல்வி :**

''வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும். இங்கு வாழும் மனிதருக்கெல்லாம் பயிற்றிப் பல கல்வி தந்து இந்தப் பாரை உயர்த்திடல் வேண்டும்'' என்று பாரதி விரும்பியதைச் சமயத் துறையில் நின்று அடியார் பெருமக்கள் பலரும் உணர்த்தி இருக்கிறார்கள்.

''கோடிக்கும் மேற்பட்ட மக்கள் பசியாலும், அறியாமை யாலும் அவதிப்பட்டுக்கொண்டு இருக்கிறார்கள். அப்படிப்பட்ட வர்கள் தீய செயலுக்குப்போய்விடாமல் அவர்களை நாம் தடுத்துப் பிடித்துக் கல்வி கற்பிக்க வேண்டும்'' என்று விவேகா னந்தர் கூறுகிறார்.

—தொடரும்

UZHAVARAM (Monthly) Regd No. TN / MA (c) 141/97
Licence No. 19, Licenced to Post Without Pre Payment
Date of Posting at Madurai Bazaar Post Office 16-12-97

உ
சிவமயம்
'என் கடன் பணிசெய்து கிடப்பதே'
உழவாரம்
ஆசிரியர் : கூடல்சுந்தரன்
துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A.
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு, டோர் நிர் 12, திருநகர், மதுரை – 6.
☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம், B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

பெறுநர்
திரு N. திருநாவுக்கரசு B.O.
7/2 சர்ச் 4வது தெரு,
T.T. நகர்,
அப்பர் அலுவலகம்,
காரைக்குடி
630 002

புரவலர் கட்டணம் ரூ 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-